### IV.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER *RE* THE HOURS OF SITTING.

MR. SPEAKER : According to the agreement arrived at to-day, we shall have general discussion on the Supplementary Statement of Expenditure for 1958–59 and Statement of Demands for Grants for Excess Expenditure in 1955–56, till 1-30 p.m. to-day, that is, one hour for discussion on the Supplementary Statement of Expenditure and 15 minutes for the discussion on the Demands for Grants for Excess Expenditure. The House will meet again at 3 p.m. to-day, when we shall take up the urgent Government Bill, viz., The Madras Cultivating Tenants Protection (Amendment) Bill. After that we shall have general discussion on the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958, till 5 p.m. to-day. I think the House is agreeable to it.

### V.—GENERAL DISCUSSION ON FIRST SUPPLEMENTARY STATEMENT OF EXPENDITURE FOR 1958–59 AND STATEMENT OF DEMANDS FOR GRANTS FOR EXCESS EXPENDITURE IN 1955–56.

MR. SPEAKER : Now, the hon. Member Sri A. R. Marimuthu will speak. Before he speaks, I would like to know how long the Hon. Minister will take for his reply.

THE HON. SRI C. SUBRAMANIAM : Ten minutes, Sir.

* SRI A. R. MARIMUTHU : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சர்க்காரால் கொண்டுவரப்பட்டிருக்கும் உப மான்ய கோரிக்கையின் மீது சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இன்றைக்கு நம் ராஜ்யத்தில் செட்டில்மெண்ட் நடத்துவதற்காக இதில் உபரித்தொகை கேட்கப்பட்டிருக்கிறது. இன்றைக்கு இந்த சர்க்காரால் எடுத்துக் கொள்ளப்பட்ட ஜமீன் இனாம் கிராமங்களில் செட்டில்மெண்ட் வேலைகள் இன்னும் சரியான விதத்தில் நடத்தப்படுவதாக தெரியவில்லை. ஆகவே அதை துரிதப்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இவ்விதம் சில கிராமங்களில் இன்னும் செட்டில்மெண்ட் செய்யப்படாமல் இருப்பதால் அங்குள்ள மக்கள் கூடுதல் வரி கொடுக்கவேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள். ஆகவே எவ்வளவு சீக்கிரமாக செட்டில்மெண்ட் வேலைகள் செய்யமுடியுமோ அவ்வளவு வேகமாக இந்த வேலைகள் செய்யப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். மேலும் புதிதாக செட்டில்மெண்ட் செய்யப்படும்பொழுது புதிதாக நீர்ப்பாசன வசதி செய்யப்பட்ட இடங்களை எல்லாம், அதாவது நஞ்சை கிராமங்களை எல்லாம் புஞ்சை பிரதேசமாக கிளாஸிபிக்கேஷன் செய்து செட்டில்மெண்ட் செய்யப்படுகிறது. இது சரியல்ல என்பதுதான் என் எண்ணம். மானாவாரி புஞ்சை என்று செட்டில்மெண்ட் செய்து கொண்டு போனால் விவசாயிக்கு தண்ணீர் தீர்வை வரி அதிகமாக செலுத்தவேண்டியிருக்கும். அதோடு இனிமேல் வரப்போகும் விவசாய வருமானவரி சட்டத்தின்படி யார் அதிகமாக நிலவரி செலுத்துகிறார்களோ அவர்கள்தான் வரி செலுத்தவேண்டிய ஒரு துர்ப்பாக்கியமான நிலைமை வரப்போகிறது. ஆகவே அவர்கள் தலையில் வரிபாரத்தை மேலும் போட வேண்டிய நிலைமை ஏற்படும். ஆகவே இதையெல்லாம் கருத்தில் கொண்டு அந்தந்த கிராமங்களில் எந்த நிலைமையில் விவசாயம் இருக்கிறது என்பதை பார்த்து அதற்குத் தகுந்தாற்போல் கிளாஸிபிக்கேஷன் செய்து செட்டில்மெண்ட் நடத்தவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள்கிறேன். மேலும், இப்போது இர்ரிகேஷன் சம்பந்தமாக உபரித்தொகை கேட்கப்பட்டிருக்கிறது. ஸி.எம்.பி. (காவேரி-மேட்டூர் பிராஜக்ட்) பகுதிகளில் தண்ணீர் போதவில்லை என்கிற குறை எப்போதும்

இருந்து கொண்டிருக்கிறது. அதிகமாக ஸி.எம்.பி. ஏரியாகவாக இருக்கின்ற பட்டுக்கோட்டை தாலூகாவில் நீர்பாசனத்திற்கு எவ்வளவு தண்ணீர் விடப்படுகின்றது என்று பார்த்தால் பழைய டெல்டா நிலங்களுக்கு தண்ணீரைப்போல் ஒரு ஏக்கருக்கு மூன்றில் இரண்டு பங்கு வீதம்தான் தண்ணீர் விடப்படுகின்றது. மணல் பிரதேசங்களாகவும், களிமண் பிரதேசங்களாகவும் இருக்கின்ற இந்த பிரதேசங்களுக்கு தண்ணீர் தேவை அதிகமாக இருக்கிறது. ஆகவே இந்த நீர்பாசன அளவை அதிகப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் சர்க்கார் ஜமீன் இனம் கிராமங்களில் இன்னும் ஏரிகள் குளங்கள் சீர்திருத்தம் செய்யவில்லை. ஆகவே அவைகளை எல்லாம் உடனடியாக சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு இப்போது தஞ்சை ஜில்லாவில் ஆயக்கட்டை சேர்ந்த பல பிரதேசங்கள் சீர்திருத்தம் செய்ய வேண்டியிருக்கிறது. இதில் அநேகம் பேர்கள் தாங்களாகவே சீர்திருத்தம் செய்வதற்காக அங்குள்ள இஞ்சினியரிடம் கேட்டால் தகுந்த காலத்தில் "புல்டோஸர்" கிடைப்பதில்லை. தேவைக்கு தகுந்தபடி அங்கு புல்டோஸர்கள் வருவதில்லை. இதனால் தேவைக்கு தகுந்த காலத்தில் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. இவ்விதம் கேட்கின்றவர்களின் பெயர்களை எல்லாம் வரிசைக் கிரமமாக எழுதி வைத்துக்கொண்டு அந்த லிஸ்டின் வரிசைக் கிரமமாக கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இவ்விதம் ஒரு வருஷத்தில் பெயர் கொடுத்தால அடுத்த வருடமாவது புல்டோஸர் கிடைக்குமா என்பது சந்தேகத்தில் இருக்கிறது. குறிப்பாக இந்த பிரதேசங்கள் எல்லாம் நஞ்சை பிரதேசமாக இருக்கிறது. ஆகவே இதை கவனத்தில் கொண்டு புல்டோஸர்கள் அதிகமாக கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த உப மான்ய கோரிக்கையைப் பார்க்கும்பொழுது எனக்கு முதலில் மனதில் படுவது என்ன வென்றால் நம்முடைய சர்க்காருக்கு, இந்த சபையில் மெஜாரிடி இருக்கிறது என்கிற காரணத்தால் எப்படி வேண்டுமானாலும் வரவு செலவு செய்து கொள்ளலாம், அதை சட்டசபைக்கு கொண்டுவரலாம் என்கிற எண்ணம் தான் மேலோங்கி இருக்கிறது என்றுதான் என் மனதில் படுகிறது. அதற்கு போதுமான ஆதாரம் இல்லாமல் அல்ல. அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய விவரங்களைப் பார்த்தால், அதாவது மூன்றாவது பக்கத்தில் "கண்டிஜென்ஸி" என்ற தலைப்பின் கீழ் கிட்டத்தட்ட 30 ஐட்டங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதில் நாற்பத்தி ஆறு லட்சத்து எண்பதினாயிரம் ரூபாய்க்கு மேலாக செலவு செய்யப்பட்டிருக்கிறது. இவைகளை செலவு செய்த பிறகு இங்கே கொண்டுவந்து இதற்கு அனுமதி கேட்கிறார்கள். 1954-வது வருடம் எதிர்பார்க்காத செலவு என்று இவ்வளவு தொகை ஒதுக்கப்படுகிறது. இந்த "கண்டிஜென்ஸி" என்பதற்கு அரசியல் சட்டத்தில் "**unforeseen**" என்று சொல்லப்பட்டிருக்கிறது. சாம்பர்ஸ் டிக்ஷனறியில் பார்த்ததிலும் "**that which could not be foreseen or providential**" என்றிருக்கிறது. நாம் எதிர்பார்க்க முடியாத அல்லது தெய்வாதீனமாக ஏற்படக்கூடிய செலவுகளை தவர்னருடைய உத்தரவோடு செலவு செய்யலாம் என்று இருக்கிறது. அப்படி இந்த விஷயங்களெல்லாம் சர்க்கார் முன் கூட்டியே எதிர் பார்க்க முடியாததா? அல்லது எல்லாம் தெய்வாதீனமாக ஏற்பட்டதா? இவைகளையெல்லாம் சர்க்கார் சக்திக்கு அப்பாற்பட்ட விஷயங்களா என்று பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும் போது, அவைகளில் பெரும்பாலும் எதிர்பார்க்கக் கூடியவை. அதிலே சில, அடிப்படை கொள்கை சம்பந்தப்பட்டவை. கொள்கை சம்பந்தப்பட்ட செலவுகளையெல்லாம் செலவழித்து விட்டு, சபையில் ஆதரவு கொடுங்கள் என்று கேட்பது இந்தச் சபையை அவமதிப்பதாக ஆகும். இதை நான் ஒரு ஒழுங்குப் பிரச்னையாகக் கிளப்பலாம் என்று இருந்தேன். அதற்கு . . .

**MR. SPEAKER :** நான் பதில் சொல்லியிருப்பேன்.

**SRI M. KALYANASUNDARAM :** அதற்கு சபாநாயகர் பதில் சொல்லி விடுவார் என்பதும், என்ன பதில் சொல்வார் என்பதும் எனக்குத் தெரியும். இதற்கு எதிராக ஓட்டு அளியுங்கள் என்று சொல்லியிருப்பார் என்பதும் எனக்குத் தெரியும். அதனால்தான் நான் ஒரு ஒழுங்குப் பிரச்னையாகக் கிளப்பவில்லை. நான் முதலில் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சபையை இந்த மாதிரி அவமதிக்கக்கூடாது. இந்தச் சபைக்கு முக்கியத் துவம் கொடுக்கவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

இதிலே, 8-வது பக்கத்தில், ஜில்லா நிர்வாகம் சம்பந்தமான விஷயம். கிட்டத்தட்ட ரூபாய் 1,28,000 ஏற்கெனவே செலவழிக்கப்பட்டுவிட்டது. 12-20 p.m. ரூபாய் 2,54,000 செலவழிக்க வேண்டிய ஒரு திட்டம், இதை கோரிக்கையிலே சேர்த்து, சபை நிறைவேற்றவேண்டும் என்று சொல்கிறார்கள். இதை விவாதிப்பதற்கு ஒதுக்கப்படும் நேரமோ குறைவு. பிஸினெஸ் அட்வைஸரி கமிட்டியில் நிதியமைச்சர் என்ன சொல்கிறார்கள் என்றால், இதற்கு $\frac{1}{2}$ மணி போதாதா என்று. இப்போது $1\frac{1}{4}$ மணி நேரம் ஒதுக்கப் பட்டிருக்கிறது. செலவழிக்கப்பட்ட தொகை எதிர்பாராத காரியங்களுக்காக என்றால் அப்படியே ஒத்துக் கொண்டு விடலாம். இது எதிர்பார்க்க முடியாதா ?

" The Government have sanctioned a scheme for the appointment of suitable political sufferers or members of their families as Social Welfare Workers in the Community Development and National Extension Service Blocks at the rate of two per block."

என்று கண்டிருக்கிறது. அதாவது அரசியல் தியாகிகளுக்கும், அவர்களுடைய குடும்பத்தினருக்கும் போதுமான வேலை கொடுப்பதற்காக என்று சொல்லப்பட்டிருக்கிறது. அரசியல் தியாகிகளிடம் பெரிதும் மரியாதையுடையவன் நான். அவர்களுடைய தியாகம் அழியாமல் இருக்க வேண்டும். இதன் மூலமாக அவர்களுடைய பெயர் கெட்டு விடக்கூடும். ஏனென்றால் பதவி கிடைக்கிறது. எளிய நிலையில் இருப்பவர்களுக்கு பென்ஷன் வேண்டுமானால் கொடுக்கட்டும். அப்பேற்பட்ட குடும்பத்தினருக்கு பென்ஷன் கொடுக்கட்டும். அதைப்பற்றி ஆட்சேபணையில்லை. தியாகம் செய்தவருக்கும், அவரது குடும்பத்தினருக்கும் உத்தியோகம் கொடுப்பது, ஒரு கட்சியை பலப்படுத்தும் கொள்கை, தியாகத்திற்கு மரியாதையாகாது என்று இவ்விடத்தில் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். பல பல சபலங்களை ஏற்படுத்தி, தியாகிகளுக்கும் அவமரியாதையை ஏற்படுத்தும். அதை விட்டு, சமுதாய நலத் திட்டம், தேசிய விஸ்தரிப்புத் திட்டம் முதலிய திட்டங்களுக்கு உதவி அளிக்குமா என்பது சந்தேகம். 151 பிளாக்கு களிலே, 300 பேர்களுக்கு மேல் நியமிக்கப்பட்டு விட்டதாக இருக்கிறது. அதற்கு இப்படி செலவு செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் கொஞ்சம் செய்யப் போகிறார்கள். இம்மாதிரியான அடிப்படைக் கொள்கை சம்பந்தப் பட்ட விஷயங்களை சர்வ சாதாரணமாகக் கொண்டு வந்து சபையின் அனுமதியைக் கோருவதை, சபையை அவமதிப்பதாகும் என்று சொல்லாமல் என்ன சொல்வது என்று புரியவில்லை.

இதே போன்று, சர்க்கார் தனி நபர்களுடைய கம்பெனிகளில் மூல தனம் போடுகிறார்கள். சர்க்கார் மூலதனம் போடுவது தொழில் வளர்ச்சிக் கென்றால் அதை ஒப்புக் கொள்ளவேண்டும். சர்க்கார் போட்ட கம்பெனி களில் பல உருப்படவில்லை. உதாரணமாக சுதர்சன் ஆயில் மில் (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்: இதில் மூலதனம் போடவில்லை). சர்க்கார் கடன் கொடுத்தார்கள். இதைப்பற்றி தனியாக வருகிறது. அப்போது இதைப் பற்றி விவாதத்திற்கு எடுத்துக்கொள்கிறேன். சர்க்கார் பல கம்பெனிகளில் மூலதனம் போட்டிருக்கிறார்கள். உதாரணமாக டிராவன்கோர் கெமிகல் அண்டு பெர்டிலைஸர்ஸ். இதிலே மூலதனம் போட்டிருக்கிறார்கள்.

ஒவ்வொரு வருஷமும் நஷ்டம், சர்க்காருக்கு டிவிடெண்ட் கொடுத்ததாகத் தெரியவில்லை. டிவிடெண்டே கொடுக்கப்படவில்லை. இது சம்பந்தமாக விவாதிக்க இந்த சபைக்குச் சந்தர்ப்பம் அளிக்கப்படவில்லை. வரவு செலவு சம்பந்தமாகவும் விவாதிக்க சந்தர்ப்பம் இல்லை. பத்து லட்சம் 20 லட்சம் என்று தனி நபர்கள் தொழிலுக்கு மூலதனம் போடுகிறார்கள். போடும்போது ஜாக்கிரதையாகப் போடவேண்டும். தொழில் வளர்ச்சிக்காக என்றால் போடவேண்டும். கோவையில் காளீஸ்வரர் மில் மூடப்பட்டிருக்கிறது. அதைத் திறக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்க முடியும். அதற்கு ஒன்றும் மூலதனம் வேண்டாம். ஒரு ரூபாய் செலவில் அதைத் திறந்து நடத்தலாம். அதற்கு என்ன நடவடிக்கை எடுத்தார்கள் என்று தெரியவில்லை. தாரங்கதாரா கெமிகல்ஸுக்கு ஐந்து லட்ச ரூபாய் கொடுத்தாகிவிட்டது. முதலில் சர்க்கார் பிரதிநிதி பார்த்து விட்டு வேண்டாம் என்று சொல்லிவிட்டு, பிறகு அதே பிரதிநிதி பார்த்து விட்டு, எடுத்துக் கொள்கிறோம் என்று சொல்லி ஐந்து லட்ச ரூபாய் மூலதனம் போடப்பட்டிருக்கிறது. ராஜபாளையத்தில், மெட்ராஸ் சிமெண்ட்க்கு பத்து லட்ச ரூபாய் அரசாங்கம் மூலதனம் போட்டிருக்கிறது. யார் இதற்கு முதலாளிகள், எவ்வளவு பங்கு போடுகிறார்கள், என்ற விஷயங்களையெல்லாம் சபை முன்பு வைத்து நம் அபிப்பிராயத்தைக் கேட்கவில்லை. ஒவ்வொரு அங்கத்தினரிடமும் யார் யார் ரிஜிஸ்டர் செய்து கொண்டிருக்கிறார்கள், யார் யார் லைசென்ஸ் வாங்கியிருக்கிறார்கள் என்ற பட்டியல் இருக்கிறதா ? என்ன அனுகூலம் இருக்கிறது, என்ன பிரதிகூலம் இருக்கிறது என்று அபிப்பிராயம் கொடுக்க முடியுமா, இதைப் பற்றிய முழு விவரங்களில்லாமல் சப்ளிமெண்டரி எஸ்டிமேட்டில் போட்டு சபை சாங்ஷன் கொடுக்க வேண்டும் என்று சொல்வது சரியல்ல. இதைப்பற்றி நிதியமைச்சர் அவர்கள் டிபார்ட்மெண்டுக்கு யோசனை கூறவேண்டும். இது எதிர் பார்க்க முடியாதது அல்ல. அல்லது, மார்ச்-எப்ரலில பணம் கொடுத்தால் நஷ்டம் ஆகிவிடாது. உடனே தொழிலை ஆரம்பிப்பதற்காக பணம் வேண்டியிருக்கிறது என்று சொன்னால், என்ன காரணத்திற்காக அவசரம் என்று சொல்லப்படவில்லை. இந்த அறிக்கையிலிருந்து ஒன்றும் புரிந்து கொள்ளமுடியவில்லை.

கடன் கொடுப்பதில் கொள்கை எப்படி இருக்கிறது என்று பாருங்கள். ஆரூரான் மில்லுக்கு ஐந்து லட்ச ரூபாய் அவசரம். ஏழை நிலச் சீர்திருத்தம் வந்தால் பங்கு கொடுக்க வேண்டும் என்பதற்காக, ஆரூரான் மில்லுக்கு அலெஸ்ட்டாக எழுதி வைத்து விட்டிருக்கும் அந்த மில்லுக்கு உரம் வாங்க ஐந்து லட்ச ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. கொடுத்துவிட்டு சபைக்கு சாங்கஷனுக்கு வந்திருக்கிறார்கள். நாம் உணவு உற்பத்தி பெருக வேண்டுமென்று சொல்கிறோம். இந்த நிலையில் விவசாயிகள் 500 ரூபாய் சர்க்காரிடமிருந்து கடன் வாங்கவேண்டுமென்றால் பல கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. வசதி இருக்கிறவர்கள் நேரடியாக சர்க்காருடன் பேசி ஐந்து லட்ச ரூபாய் உரத்திற்காக கடன் வாங்கிக் கொள்கிறார்கள். சர்வ சாதாரணமாக வாங்க முடியும் என்பதைப் பார்க்க முடிகிறது. இம்மாதிரி 46 லட்ச ரூபாய்க்கு பல கணக்குகள் இருக்கின்றன. நேரம் குறைவாக இருப்பதால், மற்ற அங்கத்தினர்கள் பேச இருப்பதால், நானே பூரா நேரத்தையும் எடுத்துக் கொள்ளக்கூடாது என்று பேச்சை சீக்கிரமாக முடித்துக் கொண்டாலும், உப மான்யக் கோரிக்கையை சபையை அலட்சியப் படுத்தக் கூடிய முறையில் கொண்டு வராமல், உண்மையிலேயே எதிர் பாராத செலவுகள் விஷயத்தில் மட்டும் கொண்டு வரவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* Sri T. T. DANIEL : Mr. Speaker, Sir, while supporting this demand, I like to point out some facts for the consideration of the Government. A provision of Rs. 6 lakhs is asked for under the Grant XXI—Industries and Cinchona, mainly for starting the

third shift in the Government Mineral Concern, Manavalakurichi, and also for the introduction of Extensive Khadi Scheme in the National Extension Service Blocks. There are two concerns at Manavalakurichi. One is a private company called the 'Hopkins and Williams Company' and the other is a Government concern. At present I understand that in the Government concern, the output per day of ilmenite is about 1½ tons only. The plant in Allepey which is processing the ilmenite produced at Manavalakurichi requires 3 tons of monazite per day. So the need for the Government to increase the monthly output from 45 tons to nearly 150 tons has become a necessity. Therefore, the Government have to increase the number of workers there and they have to start a third shift also. So far as this Government concern is concerned, the Government of Madras have 5 per cent of the shares and 50 per cent of the shares is held by the Government of India and 45 per cent is held by Kerala Government.. The profit is divided on the basis of 5 per cent for the Madras Government, 45 per cent for the Kerala Government and 50 per cent for the Central Government. Our Government are getting besides this profit a royalty for the magnesite and ilmenite that are taken from this place. The income last year was approximately Rs. 11 lakhs. I understand that very soon this mineral concern at Manavalakurichi will be taken over by the Central Government. When this takes place, sufficient protection must be given to the officers and labourers who are working in the mineral concern. We must see that our Government get some more profit or at any rate not less profit than what we are getting from this concern now.

12-30 p.m.

I must also bring to the notice of the Government that the company of Messrs. Hopkins and Williams, who are now working as a private concern, must be taken over by the Central Government, and steps must be taken to achieve this purpose. Otherwise, there would be competition between the Government concern and this private concern. I hear from the management that this company, which is a British sponsored company, is getting a good market in England. The ilmenite that is produced by the Government concern is not getting such a market in England. If this private company is nationalised, this difficulty will not arise, and there will not be unhealthy competition between the ilmenite that we are producing from our concern and that produced by the private company.

I would bring to the notice of the Government that it is really a wholesome step taken by the Government to conduct a resurvey of the entire Kanyakumari district. We know that several thousands of acres of forest lands are encroached upon by estate land owners. If a proper survey is conducted, the Government can recover these lands from the estate owners and also get a huge amount by way of prohibitive assessment for the encroachments that they have made on forest lands. So far as Kanyakumari district is concerned, there is no classification of lands on the basis of quality or the irrigation facilities afforded by the Government.

(Deputy Speaker in the Chair.)

In order that Kanyakumari district also may come to the level of the other districts, while we order resurvey, we must issue instructions to the authorities that they should classify the cultivable lands in that district on the same basis as they have classified cultivable lands in the other districts.

With these remarks, Sir, I resume my seat.

* **Sri M. JAGANNATHAN** : மதிப்பிற்குரிய துணைத் தலைவர் அவர்களே, இப்பொழுது சர்க்கார் புதிய திட்டங்களை நிறைவேற்றவேண்டுமென்பதற்காக 195 லட்சம் ரூபாய்க்கு ஒரு உப மான்யக் கோரிக்கையைக் கொண்டுவந்திருக்கிறார்கள். பல அயிட்டங்களுக்காக சர்க்கார் இந்தத் தொகையைக் கேட்கிறார்கள். இதிலே குறிப்பாக ஒன்றை மாத்திரம் நான் இந்தக் குறுகிய கால அளவிலே சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

நம்முடைய மாநிலத்தில் பல ஜில்லாக்களிலே தொழில் பயிற்சி பள்ளிக் கூடங்கள் (பாலிடெக்னிக்ஸ் பள்ளிகள்) நடத்தப்பட்டு வருகின்றன. குறிப்பாக சேலம், கோயம்புத்தூர், பொள்ளாச்சி போன்ற இடங்களில் தனியார் நடத்துகிற தொழில் பயிற்சிப் பள்ளிக்கூடங்களுக்கு மான்யம் அளிப்பதற்காக இப்பொழுது இந்த உப மான்யக் கோரிக்கை மூலம் சர்க்கார் பணம் கேட்கிறார்கள். இப்பள்ளிகளைப் பற்றி நான் ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். சமீபத்திலே நமது சென்னை மாநிலம் எங்கும் இருக்கிற தொழிற் பள்ளிகளுக்கு மாணவர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக அமைக்கப்பட்ட குழுவிலே ஒரு அங்கத்தினராக பணியாற்றும் சந்தர்ப்பம் எனக்கு கிடைத்தது. அப்பொழுது நான் நம்முடைய மாநிலத்தில் பல ஜில்லாக்களிலே இருக்கின்ற தொழில் பயிற்சிப் பள்ளிகளுக்கு விஜயம் செய்ய நேர்ந்தது. அந்தத் தேர்தல் குழுவிலே நான் அங்கத்தினராக இருந்த காரணத்தினால் பல ஆயிரக்கணக்கான மாணவர்களைப் பேட்டி கண்டு அவர்களைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இப்படி நான் பல ஊர்களுக்கு விஜயம் செய்த சந்தர்ப்பத்தில் எனக்கு ஒரு எண்ணம் தோன்றியது. நம்முடைய நாட்டிலே பலவித தொழில்கள் ஆரம்பிக்கப்படவேண்டும், நம்முடைய நாடு தொழில் மயமாக்கப் படவேண்டுமென்று சொல்லுகின்ற நேரத்திலே, இந்த தொழில் பயிற்சிப் பள்ளிகளிலே சேர்வதற்காக விண்ணப்பம் செய்துகொண்ட மாணவர்களைச் சேர்ப்பதற்கு போதிய சந்தர்ப்பமும், வாய்ப்பும், வசதியும் அளிக்கப்படவில்லை என்பதை நினைக்கும்போது, சர்க்கார் சொல்லுவதற்கும் செய்வதற்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது என்பதை நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். ஒரு பக்கத்தில் நம்முடைய நாட்டை தொழில் மயமாக்கவேண்டும், அதற்காக பல தொழில் ஸ்தாபனங்கள் நிறுவவேண்டும், பல தொழில் பயிற்சி பள்ளிகளை ஏற்படுத்தி, பெருவாரியான மாணவர்களுக்குப் பயிற்சி அளித்து, அவர்களை வேலையில் அமர்த்தி, அதன் மூலமாக தொழில் மயமாக்கவேண்டும் என்ற ஒரு திட்டத்தை சர்க்கார் பிரசாரம் செய்கிறார்கள். ஆனால் அதே நேரத்தில் போதுமான தொழில் பயிற்சிப் பள்ளிகள் இல்லை என்பதை நான் வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

**The Hon. Sri R. VENKATARAMAN**. பதினாறு பாலிடெக்னிக்ஸ் பள்ளிகள் இருக்கின்றன.

**Sri M. JAGANNATHAN** : கனம் அமைச்சர் அவர்கள் 16 தொழில் பயிற்சி பள்ளிகள். இருக்கின்றன என்று சொல்லுகிறார்கள். உண்மைதான். ஆனால் இந்த 16 பள்ளிக்கூடங்களில் சேருவதற்காக 16,000 மாணவர்கள் விண்ணப்பித்துக் கொள்கிறார்கள். மேலும், ஒரு தொழில் பயிற்சிப் பள்ளிக்கூடத்தில் ஏதோ குறிப்பிட்ட தொழில்கள்தான்

கற்றுக்கொடுக்கப்படுகின்றன. ஒவ்வொரு தொழிலேயும் ஒரு "டிரேடு" என்று சொல்லுகிருர்கள். ஒவ்வொரு தொழிலுக்கும் 10 ஸ்தானங்கள் அல்லது கூடிஞல் 15 ஸ்தானங்கள் தான் வைத்திருக்கிருர்கள். உதாரணமாக, **blacksmithy, carpentry, draftsmen (civil), draftsmen (mechanical), fitter**, போன்ற கைத்தொழில்களுக்கெல்லாம் அதிகப்படியான ஸ்தானங்களை ஒதுக்கி, ஏராளமான மாணவர்களை அதிலே சேர்த்து, நல்ல முறையில் பயிற்சி கொடுத்து, அவர்களை வேலையில் அமர்த்தி, அதன் மூலம் தொழில் மயமாக்கும் ஒரு திட்டத்தைக் கொண்டுவந்தால், மாணவர்களிடையே இருக்கும் வேலையில்லாத்திண்டாட்டத்தை ஒழிப்பதோடு, சர்க்காருடைய திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் அனுகூலமாகயிருக்கும். ஆனல் நடைமுறையில் பார்க்கும்பொழுது, இதற்குமாருக, ஏராளமான மாணவர்களுக்கு இப்பள்ளிகளில் சேருவதற்கான வாய்ப்புகள் மறுதளிக்கப்படுகின்றன. தேர்தல்குழு மாணவர்களை எவ்வாறு தேர்ந்தெடுக்கவேண்டு மென்பதற்காக விதிகள் இருக்கின்றன. மாணவர்களுக்கு "personality test" வைக்கப்படுகிறது. அதன் பிறகு "General knowledge test" வைக்கப்படுகிறது. அதன் பிறகு அவர்களுடைய "extra curricular activities" ஐப் பற்றி ஒரு டெஸ்ட் வைக்கப்படுகிறது. இம்மாதிரி டெஸ்டுகள் வைப்பதில் ஒன்றும் குறைவு இல்லை. ஆனல் இந்த டெஸ்டுகளுக்கு எல்லாம் பிறகு "இங்கே போதிய இடமில்லே, ஆகவே, தம்பி, வீட்டுக்குப் போ" என்று சொல்லக்கூடிய பரிதாபகரமான நிலேமை நம்முடைய மாநிலத்தில் இருக்கிறது.

தனியார் நடத்துகின்ற இம்மாதிரியான பாலிடெக்னிக் பள்ளிக்கூடங்களுக்கு மேலும் அதிகமாக மான்யம் கொடுத்து, இந்தப் பள்ளிக்கூடங்களை போதுமான அளவுக்கு விஸ்தரித்து, மாணவர்களுக்கு அதிகமான எண்ணிக்கையில் இப்பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படித்து, பயிற்சிபெற்று வெளிவரும் சந்தர்ப்பத்தை அளிக்க சர்க்கார் முன்வரவேண்டும். அப்படி அவர்கள் செய்யவில்லை என்ருல், நாட்டில் படித்த மாணவர்களிடையே ஏற்படுகின்ற வேலையில்லா திண்டாட்டம் அதிகமாக வளர்ந்துகொண்டுபோகும். அதே சமயத்தில் "நாட்டை தொழில் மயமாக்கவேண்டும்" என்று கூறுகிருர்களே அந்தப் பிரசாரம் அர்த்தமற்ற பிரசாரமாகப் போய்விடும். ஆகவே, சர்க்கார் இந்த விஷயத்திலே அதிக கவனம் செலுத்தி நம்முடைய மாநிலத்திலே பாலிடெக்னிகல் பள்ளிகள் சரியான முறையில் இயங்கும்படியும், மேலும் அதிலே அபிவிருத்தி ஏற்படும்படியும் செய்வதற்கு முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன். 12-40 p.m.

**Sri P. U. SHANMUGAM**: சட்டமன்ற துணைத் தலைவர் அவர்களே, சர்க்காரின் துணை மான்யக் கோரிக்கையின் மீது என்னுடைய கருத்துக்களை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். சர்க்கார் துணைமான்யக் கோரிக்கை கொண்டு வருவது சம்பிரதாயம் தான். சாதாரணமாக சர்க்கார் இடைக்காலத்தில் ஏற்படக்கூடிய செலவுக்காக இதுபோன்று சட்டமன்றத்தின் அனுமதியை கோருகிருர்கள். இம்மாதிரி சட்டமன்றத்தின் அனுமதியை பெற்றுக்கொள்ளலாம் என்று சர்க்கார் செலவுகளை மேற்கொள்ளும் முறை தவறு என்று சொல்லாவிட்டாலும், முன்பு பேசிய கனம் கலியாணசுந்தரம் அவர்கள் குறிப்பிட்டதுபோல் சர்க்கார் வரவு செலவு திட்டத்திலேயே இதைச் சேர்த்துக்கொண்டிருக்க முடியாதா, இதை இப்பொழுது ஏன் கொண்டு வரவேண்டுமென்று நான் கேட்காவிட்டாலும், நான் ஒன்று கேட்பேன். சர்க்கார் 30 இனங்களை எடுத்துக்கொண்டு, இவைகளுக்காக புதியதாக இவ்வளவு செலவு செய்யப்படுகின்றது. இதற்கு சட்டமன்றம் அனுமதி அளிக்கவேண்டுமென்று கோரியிருக்கிருர்கள். சட்டமன்றத்தின அனுமதி சர்க்காருக்கு தாராளமாக கிடைத்துவிடும் என்ருலும், எதிர்க் கட்சியைச் சேர்ந்த நாங்கள் சொல்லுகின்ற கருத்துக்களுக்கும் கொஞ்சம் செவிமடுத்து, அவைகளை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். 30 இனங்களுக்காக இவ்வளவு செலவு செய்யப்போகிறேம் என்று கொடுத்திருக்கிருர்கள். ஆனல்

இவர்கள் வரவு செலவு திட்டத்தில் ஒதுக்கியிருக்கும் தொகையை எதாவது நிறுத்திவிட்டார்களோ என்ற அச்சம் எனக்கு எற்படுகின்றது. அப்படி ஒன்றும் நிறுத்தாமல், சென்ற வரவு செலவு திட்டத்தில் சர்க்கார் உறுதி மொழி கொடுத்து இந்த மாமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட பல திட்டங்களை நிறைவேற்றுவதுடன் இந்த திட்டங்களையும் நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். புதிய திட்டங்களை உருவாக்குவதன் மூலம், பழைய திட்டங்கள் மறையக்கூடாது. புதியனதான் புகுந்ததே, பழையன கழியக்கூடாதா என்று நிதி அமைச்சர் அவர்கள் சமாதானம் சொல்லி விடக்கூடாது. உறுதிமொழி அளிக்கப்பட்ட பழைய திட்டங்களை நிறைவேற்றவேண்டும்.

அடுத்து, தேசிய தியாகிகளுக்கு 151 பிளாக்குகளில், பிளாக்குக்கு இரண்டு வீதம் 312 உத்தியோகங்கள் வழங்கப்பட்டன என்று 8-ம் பக்கத்தில் கணக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இது அச்சுப் பிழையா அல்லது அப்படித்தான் நேர்ந்திருக்கிறதா என்பதை நிதி அமைச்சர் அவர்கள் எனக்கு பதில் சொல்லும் பொழுது விளக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். சென்ற வரவு செலவு திட்ட விவாதத்தின் போது அமைச்சர் அவர்கள் பதில் அளிக்கும்பொழுது கருணாநிதி அவர்கள் 8 பக்கம் வரை நன்றாக படித்திருக்கிறார் என்று சொன்னமாதிரி பதில் கொடுக்காமல், நல்ல சமாதானத்தை நிதி அமைச்சர் அவர்கள் சொல்லுவார் என்று எதிர்பார்க்கிறேன். 8-வது பக்கத்தில் 151 பிளாக்குகளுக்கு, பிளாக்குக்கு இரண்டு பேர்கள் வீதம் 312 என்று ஆங்கிலத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது 312-ஆ அல்லது 302-ஆ என்று எனக்குப் புரியவில்லை. தயவு செய்து அமைச்சர் அவர்கள் விளக்கம் தரவேண்டும். எண்ணிக்கை எப்படி இருந்தாலும், தியாகிகளுக்கு அந்த இடங்களில் உத்தியோகம் கொடுத்ததுபற்றி எனக்கு முன்பு பேசிய கம்யூனிஸ்டு தலைவர் அவர்கள் குறிப்பிட்டார்கள். தியாகிகளுக்கு நிலம் கொடுக்கப்பட்டபொழுது நாங்கள் அதனை பாராட்டினோம், எதிர்த்தோமில்லை. அவர்களுக்கு நிலம் கொடுத்த பிறகு, சர்க்கார் உத்தியோகங்கள் கொடுத்து ஆதரிக்கவேண்டிய நிலை என்ன, அது எப்படி எற்பட்டது என்பது எனக்குப் புரியவில்லை. அவர்கள் நாட்டிற்கு செய்த சேவைக்கு இதைத்தான் பரிசாக கொடுக்கிறார்களா என்று நமக்குப் புரியவில்லை. "ஒருவேளை நாட்டிற்கு சேவை செய்ததன் மூலம் வாழ்க்கைத் தரத்தில் பின்னடைந்து விட்டார்கள். அவர்களுக்கு உதவி செய்ய கடமைப்பட்டிருக்கிறோம்" என்று சமாதானம் கூற முடியும். அவர்களுக்கு வேறு எதாவது நல்லதாகக் கொடுத்திருக்கக்கூடாதா என்று நான் கேட்கிறேன். அவர்களுக்கு கம்யூனிடி டெவலப்மெண்டு பிளாக்குகளில் வேலை தரப்பட்டிருக்கிறது. சமுதாய நலத் திட்டங்களில் அவர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பேர்ப்பட்ட வேலைகள் அரசியல் தியாகிகளுக்குக் கொடுக்கது நியாயம் தானா என்று அமைச்சர் அவர்கள் யோசித்து எனக்கு பதில் சொல்லவேண்டும்.

அடுத்து. கதர் அபிவிருத்தித் திட்டங்களுக்காக பணத்தை எராளமாக ஒதுக்கியிருக்கிறார்கள். நான் கதர் திட்டத்தை எதிர்க்கிறேன். எதிர்க்கட்சியில் இருப்பதற்காக குற்றம் சாட்டுகிறேன் என்று கருதவேண்டாம். இந்தத் திட்டத்தை சமுதாய நல அபிவிருத்தி இலாகாவில் புகுத்தியிருப்பது முறை தானா என்று எனக்குப் புரியவில்லை. இதை சர்க்கார் தயவு செய்து பரிசீலனை செய்யவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். எனக்குத் தெரிந்த அளவிலே சொல்லுகிறேன். இதை தவறு என்று மறுத்தால்கூட நான் எற்றுக்கொள்ள தயாராக இருக்கிறேன். நிலத்திற்கு எரு வாங்குவதற்கு விவசாயிகள் வந்தால், 120 ரூபாய் எருவுக்கு பணம் கொண்டு வந்தால், சமுதாய நல இலாகா அதிகாரிகள் விவசாயிகளின் தலையில் 25 ரூபாய்க்கு கதரை கட்டிவிடுகிறார்கள். நிலத்திற்கு எரு கேட்டால், உடலுக்கு துணியை கொடுத்து அனுப்புவது நியாயமா ? கதர் வாங்குவதில் கட்டாயப்படுத்தக் கூடாது என்று சர்க்கார் அதிகாரிகளுக்கு உத்தரவு போடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து, பனவெல்லம் காய்ச்சுவதற்காக ஒரு திட்டம் வகுக்கப்பட்டி ருக்கிறது. வட. ஆற்காடு மாவட்டத்தில் நடந்த மது விலக்கு ஆலோசனை கமிட்டிக் கூட்டத்தில்—எதிர்க்கட்சிக்காரர்கள் அல்ல, நான் பெயரைச் சொல்ல விரும்பவில்லை—காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த பல நண்பர்கள் பனவெல்லம் காய்ச்சும் திட்டத்தை பலமாக எதிர்த்து, அதற்காக ஒரு தீர்மானம் கூட உருவாக்கி அனுப்பியிருக்கிறார்கள். பனவெல்லம் காய்ச்சும் திட்டத்தின்கீழ் கள்ளச் சாராயம் காய்ச்சுவார்கள், பனவெல்லம் காய்ச்சப்படமாட்டாது என்று குற்றம் சாட்டி, தங்களுடைய ஆட்சேபணையை தெரிவித்திருக்கிறார்கள். இந்தப் புகாருக்கு இடம் இல்லாத வகையில் சர்க்கார் இந்தத் திட்டத்தை மேற்கொள்ளவேண்டும், கண்காணிக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அமராவதி, லோயர் பவானி அணைக்கட்டு பிரதேசங்களிலுள்ள பூங்காவினை நிரந்தரமாக்குவதற்கு சர்க்கார் திட்டமிட்டிருக்கிறார்கள். சில மாதங்களுக்கு முன்பு நமது மாநிலத்து முதலமைச்சர் கனம் காமராஜ் அவர்கள் என்னுடைய தொகுதியைச் சேர்ந்த சாத்தனூர் அணைக்கட்டுக்கு வந்திருந்தபொழுது அதன் கீழ்ப்புறத்தில் அமைக்கப்பட்டிருந்த பூங்காவினைப் பார்த்து அதை நிரந்தரமான பூங்காவாக்கக்கூடாதா என்று கேட்டார்கள். அங்கிருந்த என்ஜினியர்கள் அதற்கான திட்டத்தை உருவாக்கி சர்க்காருக்கு அனுப்புவதாகச் சொன்னார்கள். "அனுப்புங்கள், நானும் அதற்கு வேண்டிய அனுமதி அளிக்கிறேன்" என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் அமராவதி, லோயர் பவானி திட்டங்கள் தான் இதில் இடம் பெற்றிருக்கிறதே தவிர, சாத்தனூர் இடம் பெறவில்லை. இதற்குக் காரணம் எனக்குப் புரியவில்லை.

பாலிடெக்னிக் பள்ளிக்கூடங்களைப்பற்றி ஒரு வார்த்தை சொல்லுகின்றேன். வட ஆற்காட்டைச் சேர்ந்த ஒரு நபர் குடியாத்தத்தில் தொழில் கல்லூரி ஆரம்பிப்பதாகச் சொன்னார்கள். சென்ற கூட்டத்தில் அதைப்பற்றி கேள்வி கேட்கப்பட்டபொழுது உப கேள்விகளுக்கு பதில் அளிக்கையில் "ரெகரிங் எக்ஸ்பெண்டிசரை இவர் ஏற்றுக்கொள்வதாகத் தெரிந்துவிட்டது. அது சர்க்கார் பரிசீலனையில் இருக்கிறது" என்று அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார். இது பற்றி சர்க்காரின் கொள்கை விளக்கப்படவேண்டும். தொழில் கல்லூரிகளை ஏற்படுத்துவது பற்றி அரசாங்கம் எந்த முறையை கையாளுகிறது, அதே முறை தான் வட ஆற்காடு மாவட்டத்திற்கும் கையாளப்படுகிறதா, அல்லது வேறு முறை கையாளப்படுகிறதா என்று நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதில் அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சென்றமுறை காமராஜ் அவர்கள் தேர்தலுக்கு நின்று வெற்றிபெற்ற குடியாத்தத்தில் ஒரு தொழில் கல்லூரி ஏற்படுவதில் காலதாமதம் ஏன் ஆகிறது என்பது எனக்குப் புரியவில்லை. அதை விரைவிலே ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri K. SATTANATHA KARAYALAR** : உதவி சபாநாயகர் அவர்களே, இந்த உபமான்யக் கோரிக்கையின் மீது ஒரு சில வார்த்தைகள் கூற அவா உருகின்றேன்.

முதலிலே, கோதையார் நீர்ப்பாசன திட்டத்திற்காக சுமார் ரூ. 2 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது அங்குள்ள கால்வாய் மராமத்துக்காக ஒதுக்கப்பட்டுள்ளது. கோதையார் திட்டம், பெச்சிப்பாரை, பெருஞ்சாணி திட்டங்களும் உள்ளிட்டது. 1908-ம் ஆண்டில் அதாவது 50 ஆண்டுகளுக்கு மேலாக உள்ள இந்தத் திட்டங்களில் பல தவறுகளும் குறைகளும் இருக்கின்றன. இதன் பாசனத்திலுள்ள சிறு குளங்கள் பலவும் "லில் மிட்" அதாவது மண் அடிபட்டு மிகவும் பெரிய அளிவிலே வேலை செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக கடந்த பட்ஜெட் காலத்தில் இதற்காக குறிப்பிட்ட நிதி ஒன்றும் ஒதுக்கப்படவில்லை என்று கன்யா

12-50 p.m. குமாரி மாவட்ட நண்பர்கள் பலரும் குறிப்பிட்டார்கள். ஆனால் இன்று, இரண்டு லட்ச ரூபாய் செலவில், 30 மைலுக்கு மூன்று ரீச்சுகளாகப் பிரித்து, செமெண்ட் இட்டு வேலை செய்வதாகத் திட்டமிட்டிருக்கிறார்கள். ஆனால் கால்வாய் டெயில் எண்டுக்கு தண்ணீர் வருவது இல்லை என்பது இதற்கு முன்பே சொல்லப்பட்டுள்ளது. ஆனால் இந்த மராமத்து தீர யோசித்துப் போட்ட திட்டமா அல்லவா என்று தெரியவில்லை. இது வெறும் கண் துடைப்புத் திட்டமாய்த் தோன்றுகிறதே தவிர, அங்கே இருக்கும் நிலைமையை பாங்காக பரிசீலனை செய்து தீட்டியதாக தெரியவில்லை. செமெண்ட் ஸ்லேப்கள் இட்டு, கால்வாய் "பர்கொலேஷன்" தண்ணீர் வருவதை தவிர்த்து, கடைகோடிக்கு தண்ணீர் வரும் வண்ணம், முழுதும் பரிசீலனை செய்த திட்டமா, அல்லது ஆங்காங்கே ஏற்படும் கிளர்ச்சிகளுக்கு சமாதானம் தேடும் வகையில், தாற்காலிகமாகத் தீட்டப்பட்ட திட்டமா என்று தெரியவேண்டும்.

ஜீப் இனத்தில், ரெவினியு டிபார்ட்மெண்டுக்கு ஜீப் சப்ளை செய்வதற்காக மானியம் அவசரமாக என்று கோரப்பட்டிருக்கிறது. டிஸ்டிரிக்ட் பாரஸ்ட் ஆபீசர்கள், ஜீப் இல்லை என்று சொல்லி, பல் வேறு இடங்களுக்குப் போக முடியவில்லை. அவசரமாக ஜீப்கள் அவர்களுக்கு கொடுக்கப்பட வேண்டும் என்று கோரப்பட்டிருந்தும், அவர்களுக்கு இல்லாமல், ஆர். டி. ஓ.களுக்கு மாத்திரம் கொடுக்கப்படவேண்டும் என்பது என்ன காரணத்தால் என்று தெரியவேண்டும்.

பாலிடெக்னிக்குகளுக்கு, உதவி மான்யம் அவசரமாகக் கோரப்பட்டுள்ளது. பாலிடெக்னிக்குகள் விஷயத்தில் ஒன்று சொல்ல அவா உறுகிறேன். இந்தப் பள்ளிக்கூடங்களிலே, மாணவர்களைச் சேர்ப்பது சம்பந்தமாக பெரும் புகார்கள் வருகின்றன. நாம் சர்க்காரிலிருந்து பெரும் தொகை இவர்களுக்கு கொடுக்கிறோம். அவர்கள், தங்கள் இஷ்டம் போல், தங்கள் செல்வாக்கை வளர்த்துக்கொள்ளப் பயன்படும் வகையில், மாணவர்களைச் சேர்க்கிறார்கள். மாகாண ரீதியாக ஒரு கமிட்டி போட்டு, மாணவர்களை அந்தக் கமிட்டி சிபாரிசுப்படி சேர்க்கவேண்டும் என்ற ஒரு நிபந்தனையைப் போடவேண்டும். குறிப்பாக, பப்ளிக் சர்வீஸ் கமிஷனுக்கே அதைக் கொடுத்தால் நன்றாக இருக்கும். ட்ரெயினிங் ஸ்கூல் தேர்வும் கூட இதில் சேர்க்கலாம். அவர்களுக்குச் சௌகரியம் இல்லாவிட்டால், பாலிடெக்னிக்குகளுக்கு மாணவர்கள் சேர்ப்பதை எதிர்க்கட்சி அங்கத்தினர்களையும் கொண்ட ஒரு கமிட்டி போட்டு, அதன் தீர்மானப்படி சேர்ப்பது சாலச் சிறந்தது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, மருத்துவ ஆராய்ச்சித்துறையில், ஆஸ்துமா, டையாபிடிஸ் முதலிய வியாதிகளுக்கு இண்டிஜினஸ் மெடிசினை ஆராய்ச்சி செய்வதற்காக மத்திய சர்க்காரிலிருந்து, மான்யம் வருகிறது என்ற அடிப்படையில் நாம் பணம் கொடுக்கவேண்டும் என்று கோரப்பட்டுள்ளது. இந்த ஆஸ்துமா, டயாபிடிஸ் முதலிய வியாதிகள், சித்த வைத்திய முறையிலே, சிகிச்சை செய்யப்பட்டும் வருகிறது. இதற்காக 50 பெட்டுகள் அமைத்து, இந்த ஆராயச்சி நடத்துவதாகத் தெரிகிறது. பல்வேறு பகுதிகளிலும், சாதாரணமான வைத்தியர்கள் செய்யக்கூடிய சித்தமூலிகை வைத்திய முறைகள் இதற்கு உபயோகமாகும் என்ற அடிப்படையில் இந்த ஆராய்ச்சிகள் செய்யப்படுகிறதா என்று தெரியவேண்டும். மூலிகைகளை உபயோகப்படுத்தியும் புடம் இட்டு, மருந்துகள் மூலமாகவும், சிகிச்சைகள் செய்யப்படுகின்றன. ஆஸ்துமாவை டிராபிகோ இஸ்னுபீலிஸ், அலெர்ஜிக் என்று அலோபதிக் முறையிலே பிரிக்கிறார்கள். இண்டிஜினஸ் முறையிலே, இதே நோய்கள் குறிப்பிட்ட மூலிகைகள் மூலமாக குணப்படுத்தப்படுகின்றன. கிராமாந்திரங்களிலே பல்வேறு வைத்தியர்கள் பலவிதத்தில் வைத்தியம் செய்து வருகின்றனர். ஆனால், அவர்கள் இடையே, கோ-ஆர்டினேஷன் இல்லை. தனிப்பட்ட மனிதர்கள், தங்களுக்கு உகந்த முறைகளில், சிகிச்சை செய்து வருகிறார்கள். இவர்களையெல்லாம்கொண்ட ஒரு மகா நாடு கூட்டி, அவர்களோடு கலந்து ஆலோசித்து, சித்த முறையிலே ஒரு அடிப்படை

கொள்கையை வகுத்துக்கொள்வது ஆராய்ச்சியில் விசேஷ பயன் தரக் கூடியதாக ஆராய்ச்சி அமையவேண்டும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, அக்ரிகல்சர் காலேஜில் எம்.எஸ்.ஸி., பி.ஹெச். டி., டிகிரிகளுக்காக கோரப்பட்டிருக்கும் மான்யம். இந்த ஏற்பாடு மிக வரவேற்கத்தக்கது. இப்பொழுது, நமது கல்லூரிகளிலேயிருந்து வெளிவரும் மாணவர்கள், பி.எஸ்.ஸி., படித்தவர்கள், வெளியிடங்களிலே சென்று மேல் படிப்பு படிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இது வரையில் இருந்தது. ஆகவே, இந்த திட்டம் சாலச் சிறந்தது. இங்கே இருக்கும் பிரெசிடென்சி கல்லூரியிலோ, யூனிவர்சிட்டியிலோ இதுபோல் என்ன செய்ய முடியும் என்றும் யோசிக்கவேண்டும். விவசாயத் துறையில், பல்வேறு பிரிவுகள் இருக்கின்றன. அவை, அக்ரிகல்சுரல் எக்னமிக்ஸ், அக்ரிகல்சுரல் டையரியிங், என்று பலவிதமான துறைகள் ஆகும். அவைகளைப் பிரித்து அவைகளெல்லாம் அபிவிருத்தி ஏற்படக்கூடியமுறையிலே இதை நிறுவவேண்டும். ஆராய்ச்சியாளர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பாம் குர், அல்லது பனை வெல்லம் செய்யக்கூடிய துறையில், பல கூட்டுறவு சங்கங்கள் வேலை செய்து வருகின்றன. கன்யாகுமரி மாவட்டத்தில் பல சொஸைடிகள் நல்ல முறையிலே வேலை செய்யவில்லை. குறிப்பாக பனை வெல்லம் செய்பவர்கள், பவுண்ட் சுமார் ஆரரை அல்லது ஏழு அணுவுக்கு விற்கவேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள். நன்றாக சுத்தம் செய்யப்பட்ட வெல்லம் எட்டணு, எட்டரையணுவுக்கு மார்க்கெட்டில் விற்கிறது. இவர்கள் வெல்லம் அந்த விலைக்குப் போவது இல்லை. குறைந்த விலையில் விற்பதற்கு அவர்களுக்கு ஸப்ஸிடி கொடுத்து உதவினால் தான், அவர்கள் தொழில் நிற்க முடியும். உற்பத்தி செய்யும் வெல்லத்திற்கு, பவுண்டுக்கு ஒன்று அல்லது ஒன்றரை அணு உதவி தொகை கொடுத்தால் தான், இதர வெல்லத்திற்கு முன்பு அவர்கள் தொழில் நிற்க முடியும். இல்லையானல் பல பாம் குர் சொஸைடிகள் கூடிய சீக்கிரம் தங்கள் அலுவல்களை நிறுத்தவேண்டிய நிலைமை ஏற்பட்டு விடும். ஆகவே குறைந்தது சில குறிப்பிட்ட சொஸைடிகளுக்காவது, கடனாகவாவது பணம் கொடுத்து உதவி செய்தாகவேண்டும்.

அடுத்தபடியாக, ராமனதபுரம் ஜில்லாவில், ரோடுகளை அபிவிருத்தி செய்வதற்காக சுமார் ஏழு லட்சம் ரூபாய் அவசர அவசரமாகக் கோரப்படுகிறது. இப்பொழுது, அங்கு ரோடுகள் நல்ல முறையிலே போடப்படுவதில்லை, பெயரளவில் தான் ரோடுகளே தவிர வேறொன்றுமில்லை. வெறுமனே, மண்ணைத் தூவி விட்டு, பெயரளவிலே ஒரு ரோடு என்று போட்டுவிட்டு, ரோடு போட்டுவிட்டோம் என்று பிரசாரத்திற்குத் தான் அது உபயோகப்படுகிறது. ஆகவே, இந்த ரோடுகள் நல்ல முறையிலே அமையவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த மதராஸ் ஸெமென்ட்ஸ் என்ற ஸெமெண்ட் பாக்டரிக்கு "அண்டர் டெவலப்ட்டு" ஏரியா என்ற அடிப்படையில் ராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள இந்த ஆலைக்குப் பணம் கேட்கப்படுகிறது. ராமநாதபுரத்தை "அண்டர் டெவலபிட்டு" ஏரியா என்று சொல்லிக்கொண்டு. கிழக்கு ராமநாதபுரம் பகுதிக்குக் கொடுக்காமல் மேற்கு ஏரியாவுக்குக் கொடுப்பது சரியல்ல. ராஜபாளையம் ஏரியாவை "பேக்வர்ட்" ஏரியா என்பதும் சரியல்ல.

காங் மஸ்டூர்களுக்கு வீடு அமைத்துக் கொடுக்கவேண்டுமென்று அந்த இனத்தில் பணம் கோரப்படுகிறது. உபயோகமில்லாமல் சிங்க் ஷீட்டுகள் இருந்தன. அவைகளைக்கொண்டு மஸ்தூர்கள் வசிக்க வீடுகள் கட்டிக் கொடுப்பது என்பது பிரயோசனம் இல்லை. உபயோகமில்லாத பொருள்களைக் கொண்டு செய்து கொடுப்பதில் என்ன லாபம்? ஏதோ பப்ளிக் அக்கௌண்ட்ஸ் கமிட்டி சிபாரிசு செய்த அடிப்படையில், சிங்க் ஷீட்டுகளை

பயன்படுத்த இதைச் செய்து கொடுத்து விடுவது போதாது. நல்ல முறையிலே அவர்களுக்கு உபயோகமாகும் முறையிலே, அவர்கள் வசிக்கக் கூடிய சௌகரியமாக இருக்கும் முறையிலே கட்டிக் கொடுக்கவேண்டும். இந்த திட்டம் அப்படிச் செய்வதாகத் தெரியவில்லை.

ஆரூரான் ஷுகர் மில்லுக்கு அவசர அவசரமாக ரூபாய் ஐந்து லட்சம் கடனாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அதற்கு அவசர அவசரமாக மானியம் கோரப்படுகிறது. இந்த ஆரூரான் ஷுகர் மில்லுக்கு மாத்திரம் பணம் கொடுக்கவேண்டியதன் அவசியத்தை அறிய அவா உறுகிறேன். இதன் பொருளாதார நிலைமைபற்றி சர்க்காருக்கே சந்தேகம் இருப்பதாகத் தெரிகிறது. பணம் சரியான காலத்தில் கொடுபடாவிட்டால், ஏழரை சதவிகிதம் அதிக வட்டியாக வசூலிக்கப்படும் என்றிருக்கிறது. இது ஒரு லூஸிங் கன்ஸர்ன் என்று ஏற்கனவே இந்த சபையிலேயே ஒரு விவாதத்தின் போது கூறியதாக என் நினைவு. அம்மாதிரி லூஸிங் கன்ஸர்ன் ஒன்றில் நாம் ஏன் முன் பணம் கொடுக்கவேண்டும் என்று தெரிய அவா உறுகிறேன்.

1 p.m. THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, முதன் முதலில், ஸ்ரீ கலியாணசுந்தரம் அவர்கள், இந்த மாதிரி பல உப மானிய கோரிக்கைகளைக் கொண்டு வருவதானது இந்த சட்டசபையை அவமதிப்பதாக ஆகும் என்கின்ற ஒரு கருத்தை வெளியிட்டார். நாம் எடுத்துக்கொண்டிருக்கக்கூடிய பல்வேறு திட்டங்களை நிறைவேற்றுவதற்கு எல்லா விதமான முயற்சிகளையும் நாம் செய்து கொண்டு வருகிறோம். இப்படி ஆரம்பிக்கப்படும் சில திட்டங்களுக்கு மத்திய அரசாங்கத்தினுடைய உதவியையும் நாம் பெற்று அவைகளை ஆரம்பிக்க வேண்டியதாக இருக்கிறது. அப்படி உதவி பெறுவதற்கு முன்னதாகவே சில திட்டங்களை எடுத்து நடத்த வேண்டியதாக இருக்கிறது. அப்படி உதவி பெறுவதற்கு முன்னதாகவே பட்ஜெட்டில் இதை சாங்ஷன் செய்து அந்த திட்டங்களை எடுத்து நடத்தி விடலாம் என்று சொல்லிவிட முடியாது. ஆகையால்தான் பல திட்டங்களை மத்திய சர்க்காருடைய உதவி கிடைக்கும் என்கின்ற உறுதி கிடைத்தவுடனேயே அந்த திட்டங்களையெல்லாம் எடுத்து நிறைவேற்ற வேண்டுமென்கின்ற முயற்சி செய்கிறோம். ஆனால் ஸ்ரீ கலியாணசுந்தரம் சொல்லுகிற வழியை பின்பற்றினால் இந்த திட்டங்களையெல்லாம் எடுத்து நடத்துவது என்பது சந்தேகம்தான். அப்படி இல்லாமல் மார்ச்சு மாதம் வரையில் காத்திருந்து அப்பொழுது அதைப்பற்றி ஆலோசனை செய்து அதன் பிறகு அடுத்த வருஷத்தில்தான் அவைகளை எடுத்துக்கொள்ள முடியும். அதனால் நாம் விரும்புகிற அவ்வளவு திட்டங்களும் எடுத்துக்கொள்ளப்படாமல் நின்று போய்விடும். பல புதிய திட்டங்கள் அவ்வப்போது எடுத்துக்கொண்டு உடனடியாக நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது. அந்த திட்டங்கள் எல்லாம் அவ்வப்போது சேர்க்கப்பட வேண்டியதாக இருக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். இப்படிப்பட்ட கோரிக்கைகளை சபை வரவேற்பதற்கு பதிலாக குற்றம் சொல்வது என்றால் அது சரியல்ல என்பதை மட்டும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக கனம் ஷண்முகம் அவர்கள் பேசும்போது ஒன்றைக் குறிப்பிட்டார். புதிய திட்டங்கள் வரும்போது பழைய திட்டங்கள் எல்லாம் நிறைவேற்றப்படாமல் நின்று போய்விடுகின்றன என்று சொல்லுகிறார். ஏற்கெனவே எடுத்துக்கொண்ட திட்டங்கள் எல்லாம் எடுத்துக்கொள்ளப் பட்டு அவைகள் எல்லாம் நிறைவேற்றப்பட்டுக்கொண்டுதான் வருகின்றன. எல்லாவற்றையும் நிறைவேற்றுவதற்குத்தான் எல்லா விதமான முயற்சியும் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன. அவைகளுக்கு ஏதாவது கால தாமதமோ அல்லது தடையோ ஏற்பட்டால் புதிய திட்டங்கள் ஏற்பட்டதன் காரணம் அல்ல, அவைகளினால் காலதாமதமும் தடையும் ஏற்பட்டிருக்காது, வேறு ஏதாவது இயற்கை காரணமாக இருக்கலாம். ஆகவே முன்னமேயே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் திட்டங்கள் எல்லாம் புதிய திட்டங்களினால் தடைபடாது என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளு

கிறேன். ஆனால் அவர் பேசும்போது புதிய திட்டங்களினால் பழைய திட்டங்கள் எல்லாம் பாதிக்கப்படுகின்றன என்ற ரீதியில் பேசினார். எடுத்துக்கொள்ளப் பட்ட திட்டங்கள் எல்லாம் நல்ல முறையில் நிறைவேறுவதற்கு எல்லா முயற்சிகளையும் செய்துகொண்டுதான் வருகிறோம்.

பல தொழில்களை இங்கே நிறுவுவதற்கு பல ஏற்பாடுகள் செய்வதைப் பற்றியும் அதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக்கொண்டு வரப்படுவது பற்றியும் அதில் சர்க்கார் சில முதலீடுகள் போடுவதைப்பற்றியும், அப்படி முதலீடு போடுவது குற்றமாகக் கருதி கனம் கலியாணசுந்தரம் அவர்கள் பேசும்போது அந்த ரீதியில் பேசினார். தொழிலபிவிருத்தி அடிப்படையில் முதலில் நாம் என்ன செய்ய வேண்டுமென்ற அடிப்படையில் சில தொழில் களை நாமே ஆரம்பிக்க வேண்டும் என்று ஒரு முடிவு செய்யப்பட்டிருக்கிறது. சில தொழில்கள் அதாவது இரும்பு, உருக்கு இவை போன்ற அடிபடைத் தொழில்களை சர்க்காரே எடுத்து நடத்துவது என்றும் தொழில் கொள்கை ஒன்று ஏற்கெனவே வரையறுக்கப்பட்டிருக்கிறது. சில தொழில்கள் தனி யார் துறையில் தனிப்பட்டவர்களை ஈடுபடுத்த வேண்டும் என்றும் வரை யறுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு வேண்டிய முயற்சிகளையும் எடுத்துக் கொண்டு வருகிறோம். அதற்கு வேண்டிய முயற்சிகளையும் நாம் எடுத்துத் தான் ஆக வேண்டும். அந்த முறையில் தான் தாரங்கதாரா கெமிக்கல் இண்டஸ்ட்ரி இங்கே வர வேண்டும் என்று முயற்சி செய்து அது வரு வதற்கும் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம். நாம் ஏற்கெனவே வகுத்துக் கொண்டிருக்கிற தொழில் கொள்கை அடிப்படையில் இப்படி சில தனிப்பட்டவர்கள் இங்கே தொழிலை நடத்துவதற்கு முன் வந்தால் அவர்களுக்கு உதவி அளிக்க வேண்டும் என்று ஒரு கொள்கை வைத்துக் கொண்டிருக்கிறோம். அதைப் போலவேதான் பேசிக் கெமிக்கல் இண்டஸ் ட்ரிஸ் இவைகளுக்கும் நாம் உதவி செய்து கொண்டு வருகிறோம். அதன் மூலம் நாம் சில உப தொழில்களை ஆரம்பிக்க முடியும் என்ற அடிப் படையில் அவைகளை ஆரம்பிக்க தனிப்பட்டவர்களுக்கு நாம் உதவி செய்து கொண்டு வருகிறோம். அப்படிப்பட்ட தொழில்களையும் இங்கே கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்து கொண்டு வருகிறோம். இந்த மாகாணத்தில் இல்லாத ஒருவர் இங்கே வந்து தொழில் ஒன்றை ஆரம்பிக்க ஏற்பாடு செய்கிறோம் என்று சொன்னால் அவர்களுக்கு நம்முடைய உதவி இருக்க வேண்டும் என்ற அடிப்படையில் அவர்களுக்கு உதவி செய்து வருகிறோம். அவர்கள் இங்கே வந்து கோடிக் கணக்கான ரூபாய் முதலீடு போடும் போது அதற்கு நாம் பத்து லட்சம் ரூபாயாவது முதலீடு போடலாம் என்கிற முறையில் நாம் உதவி செய்கிறோம். அவர்கள் இங்கே வந்து தொழிலை நடத்துவதற்காக அவர்களுக்கு எல்லா விதமான உதவியையும் கொடுக்க வேண்டும் என்ற முறையிலும், அப்படி பத்து லட்சம் ரூபாய் முதலீடு போடுகிறோம். இந்த பத்து லட்சம் ரூபாயும் முதலிலேயே கொடுக்காமல் முதலில் ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்து விட்டு பிற்பட்டு ஐந்து லட்சம் ரூபாய் கொடுக்கப்படுகிறது.

இன்னும் சில தொழில்களை அமைப்பதற்கு போதிய ஏற்பாடுகளும் செய்யப்பட்டு வருகிறது. அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என்பதற்காக பெரும் முயற்சிகளைச் செய்தோம். அதற்காக லைசென்சும் வழங்கப்பட்டு, அதற்கான யந்திரங்களும் வெளி நாட்டிலிருந்து வர வழைக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அப்படி இன்றைக்கு தனிப்பட்டவர்கள் முன் வந்து இங்கே தொழில்களை ஆரம்பிக்க முன் வரும்போது அவர் களுடைய தொழிலில் மக்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டு அவர்களும் அதில் முதலீடு செய்வதற்கு முடியும் என்கிற அடிப்படையில் அந்த தனிப்பட்டவர் களுக்கு எல்லா விதமான உதவியும் அளிக்கப்பட்டு வருகிறது. அதைப் பற்றி பரிசீலனை செய்து நல்ல தொழில் வளம் நம் ராஜ்யத்தில் ஏற்பட வேண்டும் என்றும், அது லாபகரமாக நடைபெற வேண்டும் என்றும், அது நம் நாட்டிற்கு அவசியமான தொழில்தானா என்றும் இப்படிப்பட்ட முக்கியமானவைகளையெல்லாம் பரிசீலனை செய்து அதன் பிறகு அவர் களுக்கு உதவி அளிக்கப்படுகிறது. அந்தத் தொழிலை ஆரம்பிக்க சர்க்கார்

ஓரளவு உதவி செய்கிறது என்கிற முறையில் ஒரு தொழிற்சாலையை ஆரம்பிக்க உதவி செய்கிறோம். அப்படிப்பட்ட தொழில்கள் அடுத்த வருஷத்திலேயே உற்பத்தியாகக்கூடிய முறையில் இன்றைக்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறது. இப்படி பல தொழில்கள் இங்கே ஏற்பட வேண்டும் என்ற கொள்கையில் சர்க்கார் அவைகளுக்கு ஊக்கம் காட்டுகிறது. இந்த அடிப்படையில் தனிப்பட்டவர்களுக்கு ஊக்கம் அளிக்க வேண்டும் என்பதற்காக, தொழிலை இங்கே ஆரம்பிக்க வேண்டும் என்று முன் வருகிறவர்களுக்கு உதவி செய்வது சரியல்ல என்ற கருத்துப் படும்படி இங்கே சொல்வது ஆச்சர்யத்தை கொடுக்கிறது. இன்றைக்கு நாம் யோசிக்க வேண்டியது, இங்கே நமக்கு தொழில் வேண்டியது அவசியம்தானா என்று பார்க்க வேண்டும். இங்கே தொழில் வளர வேண்டுமென்ற அடிப்படையில் தனியார்களுக்கு உதவி செய்து அவர்கள் மூலம் இங்கே தொழில் வளர வேண்டும், அதன் மூலம் நம் நாட்டில் பல உப தொழில்கள் ஏற்பட வேண்டும் என்ற அடிப்படையில் அப்படிப்பட்டவர்களுக்கு இங்கே எல்லா விதமான உதவிகளையும் சௌகரியங்களையும் செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்காக ஊக்கமும் அளிக்க வேண்டியதாக இருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு கொள்கையை வகுத்து அந்த அடிப்படையில் இப்பொழுது தனிப்பட்டவர்களுக்கு ஊக்கம் அளிக்கப்பட்டு வருகிறது. இப்படிப்பட்ட கொள்கை வகுத்துக் கொண்டதற்குப் பிறகு நாட்டில் புதிய தொழில் ஏற்பட வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டு வரும். அந்த அடிப்படையில் இப்பொழுது முக்கியமாக ரயான் தொழிற்சாலை ஒன்று வரப்போகிறது. அதற்கு தனியார் சுமார் $4\frac{1}{2}$ கோடி ரூபாய் முதலீடு செய்ய தயாராக இருக்கிறார்கள். அதற்கு உதவி செய்ய வேண்டுமென்ற பிரச்னை இப்பொழுது ஆலோசனையில் இருக்கிறது. இதற்கு எந்த அளவில் உதவி செய்ய வேண்டும், தொழிற்சாலையோ ஏற்படுத்த வேண்டியதாக இருக்கிறது, அது நல்ல முறையில் ஆரம்பிக்கப்பட வேண்டும், அதற்கு எப்படி உதவி செய்வது என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம். அதேபோல் அலுமினியம் தொழிற்சாலை ஏற்பட போகிறது. அதையும் தனியார் துறைக்கு விட்டிருக்கிறார்கள். அதுவும் நல்ல முறையில் கூடிய சீக்கிரத்தில் வரும். அவைகளுக்கும் உதவி செய்ய வேண்டும் என்று அதுவும் கொள்கை அடிப்படையில் இருக்கிறது. கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் இப்படிப்பட்ட தொழில்கள் நமக்கு அவசியம்தானா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். தொழில் அமைக்க வேண்டும் என்ற கொள்கை அடிப்படையில் இப்படிப்பட்ட தொழில்கள் எல்லாம் அவசியம் என்றும், அதற்கு சர்க்கார் உதவி அளிக்க வேண்டியதும் அவசியம் என்றும் முடிவு செய்திருக்கிறார்கள். தொழில் அபிவிருத்தி அடைய வேண்டுமென்ற அடிப்படையில் இவைகளுக்கு உதவி செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறது. அப்படி இல்லாமல் தனியார்களுக்கு பணத்தைக் கொடுத்து விட்டார்கள், முதலாளிகளுக்கு சலுகைகள் காட்ட வேண்டும் என்ற அடிப்படையில் சர்க்கார் பணத்தை எடுத்து அவர்களுக்குக் கொடுத்து விட்டார்கள் என்று சொல்வது சரியல்ல. சர்க்கார் பணத்தை எடுத்து முதலாளிகளுக்கு வழங்கி விட்டார்கள் என்கிற முறையில் கம்யூனிஸ்ட் கட்சி பிரசாரம் செய்தால்—அது வேறு இடங்களில் அதாவது கம்யூனிஸ்ட் கட்சி கடை பிடிக்கும் கொள்கை அடிப்படையில் நடக்கும் இடங்களில் அது பொருந்தும், இங்கே அது பொருந்தாது—அது நம் தேசத்திற்கு பொருந்தாது. நம் தேசத்தில் அப்படிப்பட்ட கம்யூனிஸ்ட் கொள்கையை அனுசரிக்க முடியாது. வேறு இடங்களில் வேண்டுமானால் அப்படிப்பட்ட கொள்கையைக் கடைப் பிடிக்கலாம், அங்கே அந்தக் கொள்கையை வலியுறுத்தலாம். இப்படி சர்க்காருடைய பணத்தை எடுத்து முதலாளிகளுக்குக் கொடுத்து விட்டார்கள் என்றும், முதலாளிகளுக்கு சாதகமாக இந்தச் சர்க்கார் இருக்கிறார்கள் என்றும் பிரசாரம் செய்ய ஆரம்பித்தால் அவர்கள், தமிழ் நாட்டில் தொழில் வளருவதற்கு, துரோகம் செய்தவர்களாவார்கள் என்பதை வலியுறுத்திச் சொல்லிக் கொள்ளுகிறேன். இந்த முறையில்தான் ஆரூரான் மில்லிற்கு ஐந்து லட்சம் ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது தனிப்பட்டவருக்கு சர்க்கரை ஆலையை அமைப்

பதற்கு ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்து உதவி அளிக்கப்பட்டிருக்கிறது. ஐந்து லட்ச ரூபாய் எந்த முறையில் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ரூபாயாக கொடுக்கப்படவில்லை. இன்றைக்கு வெளியிலேயிருந்து நமக்கு உரம் வருகிறது. அந்த உரத்தை வாங்குவதற்காக மத்திய சர்க்கார் கடனாகக் கொடுக்கிறது. அதையெல்லாம் விற்று, பணம் வந்த பிறகுதான் பணத்தைத் திருப்பிக் கொடுக்கிறோம். ஆகையால், இந்த பெரும் அளவிலே உரம் முழுவதும் கடனாகத்தான் விற்கப்படுகிறது. ' இந்த முறையிலே ஆரூரான் சர்க்கரை ஆலையிலே நாங்கள் அதிகப்படியாக கரும்பு வைக்க வேண்டியிருக்கிறது. அதற்கு வேண்டிய உரத்திற்காக நாங்கள் ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்து, அந்த அளவு உரம் வாங்க நிதி வசதி இல்லை, ஆதலாலே இதற்கு கடன் வசதி வேண்டும் ' என்று கேட்டார்கள். அதுவும் நீண்ட காலக் கடன் வசதி இல்லை. 1959-ம் வருஷம் மார்ச்சு மாதம் 31-ந் தேதிக்குள், இந்த வருஷக் கணக்கு தீருவதற்குள், பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்ற முறையிலே கொடுத்திருக்கிறோம். 1-10 p.m.

ஒன்றை நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். கரும்பு உற்பத்தி அதிகமாகிறதென்றால், தனிப்பட்டவர்களுக்கு அது லாபம் வருகிறதே என்ற முறையிலே நாம் பார்க்க முடியாது. இன்றைக்கு அதன் மூலமாக சர்க்கரை உற்பத்தி அதிகமாகிறதா என்று பார்க்கிறோமே தவிர, எந்த மில்லுக்கு அதிக லாபம், அதிக உற்பத்தி ஆகிறது என்று பார்க்கவில்லை. இன்றைக்கு தமிழ் நாட்டில் எந்த அளவு உற்பத்தி அதிகமாகிறதோ—அது எந்தத் துறையாக இருந்தாலும்—அந்த அளவு நாட்டினுடைய வளம் வளருகிறது. அந்த முறையிலே பார்க்கும்போது, இன்றைக்குத் தனிப்பட்டவர்களுடைய முயற்சியும் சமுதாயத்தின் வளர்ச்சிக்காகத்தான் இருக்கிறது என்ற முறையிலேதான் இன்றைக்கு அமைப்பு இருக்கிறது. அவர்கள் எந்த அளவு லாபம் பெறலாம், அந்த லாபத்திலே எவ்வளவு பகுதி சர்க்காருக்குப் போகும் என்பது எல்லாம் வேறு விஷயம். வரி விதிப்புக் கொள்கைப் பிரகாரம், அதற்கு வேண்டிய விதிகளை வகுத்திருக்கிறார்கள். அதிலும் நாம் இன்றைக்கு சர்க்கரையை வெளிநாட்டுக்கு அனுப்ப வேண்டுமென்று சொல்கிறோம். வெளிநாட்டுக்கு அனுப்ப வேண்டுமானால், சர்க்கரை இங்கு எந்த அளவு உற்பத்தி ஆகிறதோ, அந்த அளவு நம்முடைய ராஜ்யத்திற்கு நல்ல சலுகை கிடைத்து இருக்கிறது. இது ஏதோ ஆரூரான் சர்க்கரை ஆலைக்கு ஐந்து லட்சம் கொடுத்துவிட்டார்கள். ஆகையால், காங்கிரஸ் சர்க்கார் ஏதோ தனிப்பட்ட முதலாளிகளுக்குச் சலுகை கொடுக்கிறது என்று பேசுவார்களானால், இன்றைக்கு எந்த முறையிலே உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்ற அடிப்படையைத் தெரியாமல் பேசுகிறவர்கள்தான் அவ்வாறு பேசுவார்களே தவிர, உண்மையாக நாட்டின் வளம், தொழில் வளம் பெருக வேண்டும், சர்க்கரை போன்ற பல பொருள்கள் இங்கே பெரும் அளவு உற்பத்தியாக வேண்டும் என்று நினைக்கின்றவர்கள் அவ்வாறு பேச மாட்டார்கள். தூங்குகிறவர்களைத் தட்டி எழுப்பலாம், விழித்துக் கொண்டே இருப்பவர்களை எவ்வளவுதான் தட்டினாலும் எழுந்திருக்க மாட்டார்கள் அல்லவா? அதுபோல், வேண்டுமென்றே குதர்க்கம் பேசுகிறவர்களுக்கு எவ்வளவுதான் எடுத்துச் சொன்னாலும், அவர்கள் வழியைத் திருத்திக்கொள்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. குறைகளைச் சொல்லிக்கொண்டேதான் இருப்பார்கள்.

இந்தச் சபையிலே நான் உறுதி கொடுக்க விரும்புகிறேன். தனிப்பட்டவர்களுக்குச் சலுகை கொடுக்கும் முறையிலே எந்த விதத்திலேயும் இந்த சர்க்கார் நடந்து கொள்ளாது, நம்முடைய நாட்டில் தொழில் பெருக வேண்டும், விவசாயம் பெருக வேண்டும், உற்பத்தி பெருக வேண்டும், என்பதற்காக என்ன என்ன முயற்சிகளை யெல்லாம் எடுக்க வேண்டுமோ, அந்த முயற்சிகளை யெல்லாம் நாங்கள் எடுத்தே தீருவோம். என்ன அபத்தமாக கம்யூனிஸ்டு கட்சி அங்கத்தினர்கள் சொன்னாலும்

அதற்காக நாங்கள் கவலைப்படவில்லை. நாட்டின் வளம் குறைந்தால் தான் அவர்களுடைய கட்சி வளம் பெருக முடியும் என்ற அடிப்படையிலே எப்போதும் பஞ்சமும், பட்டினியும், குறையும் இருந்து கொண்டிருந்தால் தான், கம்யூனிஸ்டுகளுக்கு மேடை கிடைக்கும் என்ற அடிப்படையிலே அவர்கள் பேசுகிறார்கள் என்று நான் நினைக்கிறேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ ப. உ. சண்முகம் அவர்கள், கதர் உற்பத்தியைப் பற்றி குறிப்பிட்டு, அதைக் கம்யூனிடி டெவலப்மெண்டோடு சேர்க்க வேண்டுமா என்று தெரிவித்தார்கள். இன்றைக்கு, கம்யூனிடி டெவலப் மெண்ட் எடுத்துக் கொண்டிருப்பது, அங்கு இருக்கும் சமுதாயம் எல்லாத் துறைகளிலும் வளருவதற்கு ஒரு முழு திட்டத்தை அங்கு ஏற்பாடு செய்வதற்காகத்தான். ஆகையால், வேலை இல்லாமல் இருக்கின்றார்களே, அவர்களுக்கு வேலை கொடுப்பதற்கு இந்த கதர் இயக்கம் மூலமாக ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம். அதுவும் முக்கியமாக வறண்ட பிரதேசங்களில், தாராபுரம் போன்ற பிரதேசங்களில் இருக்கும் மக்கள் நூற்பு மூலமாகவே அவர்கள் வாழ்க்கையை நடத்துகிறார்கள் என்று நாம் பார்க்க முடியும். ஆகையால்தான், காதி அபிவிருத்திக்கும் கம்யூனிட்டி டெவலப்மெண்டுக்கும் முரண்பாடு இல்லை. இரண்டும் ஒன்றியிருக்கிறது. இதிலே செலவு செய்யக்கூடிய பொருள் செலவு அல்ல. உற்பத்தி செய்வதற்காக பணம் உடனடியாக கொடுக்க வேண்டியிருக்கிறது. பணத்தைப் பின்னாலே திருப்பிக் கொடுப்பதற்குச் சபை அனுமதி வேண்டும். அந்தத் தொகையைக் கேட்டிருக்கிறது. அந்தத் தொகை முழுவதும் செலவாகப் போவது இல்லை. திரும்பி வராமல் போகக் கூடியது அல்ல. முதலீடு மாதிரி. விற்பனை ஏற்பட்டு அதன் மூலமாக வந்துவிடப் போகிறது. இதற்காக காதி கமிஷனும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அவர்கள் கொடுக்கும் தொகையைத்தான் உபயோகப்படுத்துகிறார்கள். வரவு வருவதற்கு இந்தச் சபையினுடைய அனுமதி அவசியம் இல்லை. வரவு வந்து தீரும். ஆனால், ஒரு காரியத்திற்காக கொடுப்பதாக இருந்தாலும் இந்தச் சபையின் அனுமதி பெற்றுத்தான் கொடுக்க வேண்டும்.

பாலி டெக்னிக் பற்றி சொல்லப்பட்டது. குடியாத்தத்தில் என் வரவில்லை, என்று கேட்கப்பட்டது. குடியாத்தத்திலும், மற்ற இடங்களில் எந்த முறையிலே சலுகை கொடுக்கப்படுகிறதோ, அந்த முறையிலேதான் கொடுப்பதாக ஒத்துக்கொண்டிருக்கிறோம். அது வரையறுக்கப்பட்ட கொள்கை. ஆனால், இதில் முக்கியமான கஷ்டம் என்னவென்றால், அதிலே முதலீடு போடுவதிலேகூட அதிக கஷ்டம் இல்லை. மூன்று அல்லது மூன்றரை லட்சம் கொடுத்தால், பாக்கித் தொகையை மத்திய சர்க்காரும் சென்னை ராஜ்ய சர்க்காரும் கொடுத்து விடுகிறார்கள். சிக்கனமாகச் செலவு செய்தால், குறைத்துச் செய்யலாம். ஆனால், வருஷா வருஷம் ஆகும் அன்றாட செலவுகளுக்கு ஏற்பாடு செய்வதுதான் பெரும் கஷ்டமாக இருக்கிறது. குறைந்தது 30 ஆயிரம் ரூபாய் வருஷமொன்றுக்கு செலவு செய்யத் தயாராக இருந்தால், ஒரு பாலி டெக்னிக் ஏற்பாடு செய்ய முடியும். மத்திய சர்க்காரிடமிருந்தும் ராஜ்ய சர்க்காரிடமிருந்தும் கிடைக்கக் கூடிய உதவி போக, தனிப்பட்டவர்கள் 30 ஆயிரம் ரூபாய் செலவு செய்தால் பாலி டெக்னிக் ஏற்பாடு செய்ய முடியும். குடியாத்தத்தில் $3\frac{1}{2}$ லட்ச ரூபாய் கொடுக்கத் தயாராய் இருந்தார்கள். ஆனால், வருஷமொன்றுக்கு 30 ஆயிரம் ரூபாய் ஏற்பாடு செய்வதில் தாமதம் இருந்தது. அதற்கும் இப்பொழுது ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆகையால், இப்பொழுது குடியாத்தத்தில் ஏற்பாடு செய்வதற்குச் சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் அதற்கு அனுமதியும் கிடைக்கும்.

SRI V. K. KOTHANDARAMAN : சபாநாயகர் அவர்களே, சொந்த விளக்கம் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அன்றாட நடைமுறைச் செலவுக்குக் கொடுக்கிறதாக ஸ்ரீ ராஜகோபால் நாயுடு அவர்கள்

ஒப்புக்கொண்டு சர்க்காருக்கு எழுதியிருக்கிறார்கள். அப்படி எழுதி பல மாதங்கள் ஆய்விட்டன. அம்மாதிரி அன்றுடச் செலவுக்காக 25 சத விகிதத்தை ஏற்றுக்கொள்வதாக ஒப்புக்கொண்டு எழுதியிருக்கிறார்கள். அப்படி ஒப்புக்கொண்டிருந்தும் நான்கு பாலி டெக்னிக்குகள் மற்ற ஜில்லாக்களுக்குப் போயிருக்கின்றன. ஆனல், பிற்பட்ட ஜில்லாவாகிய வடாற்காடு ஜில்லாவுக்கு ஒன்றுமே வரவில்லை யென்றல், எந்த அளவுக்கு அந்த ஜில்லா கவனிக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் யோசிக்கவேண்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் சொல்வது வாஸ்தவம்தான். இரண்டு மாதங்களுக்கு முன்னமேயே 30 ஆயிரம் ரூபாய் வருஷமொன்றுக்கு ஏற்பாடு செய்வதாகத் தெரிவிக்கப் பட்டது. ஆனல், மற்றவர்களெல்லாம் ஒரு வருஷத்திற்கு முன்னமேயே ஏற்பாடு செய்து விண்ணப்பம் போட்டிருந்தார்கள். அந்த விண்ணப்பங்கள் பரிசீலனை செய்யப்பட்டு, தயாராக இருந்தன. அதனல் அந்த இடங்களில் ஆரம்பிப்பது முடிந்தது. நான் முன்பே குறிப்பிட்டேன். இப்பொழுது 30 ஆயிரம் ரூபாய் கொடுப்பதாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால், அது பரிசீலனையில் இருக்கிறது. இது யாருடைய குறையும் அல்ல. வருஷமொன்றுக்கு 30 ஆயிரம் ரூபாய் கொடுப்பதென்றல் யாருக்கும் கஷ்டமாகத்தான் இருக்கும். அப்படிப்பட்ட கஷ்டத்தை நிவர்த்திக்க முன் வந்ததைப் பாராட்டுகிறேன். இப்பொழுது அதை ஏற்று அடுத்த வருஷத் திலாவது பாலி டெக்னிக் ஏற்பாடு செய்வதற்குச் சர்க்கார் எல்லா விதமான முயற்சிகளும் செய்துகொண்டு வருகிறது.

கன்யாகுமரி ஜில்லாவிலும் ஒரு பாலி டெக்னிக் ஏற்பாடு செய்ய முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன.

மாணவர்களைச் சேர்த்துக் கொள்வதுபற்றி ஸ்ரீ ஜகன்னதன் அவர்கள் கூறினர்கள். ஏதோ குறைகள் சொல்லலாம். மாணவர்கள் சேர்ந்து படிக்கிறார்கள். அதுவும் அவர்கள் நம் ராஜ்ய மாணவர்கள்தான். அந்த அளவு நமக்குத் திருப்தி கொடுக்க வேண்டும். இனிமேல் ஓரளவு தகுதி யுள்ளவர்கள்தான் எடுத்துக்கொள்ளப்பட வேண்டுமென்று சில விதிகளை ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதைப்பற்றி இப்பொழுது பரிசீலனை இருந்து வருகிறது. ஆகவே, ஏதோ வேண்டியவர்களை எல்லாம்—தகுதி இருந் தாலும், தகுதி இல்லாவிட்டாலும் எடுத்துக் கொள்வது என்றில்லாமல் தகுதியுள்ளவர்கள் என்று நிர்ணயித்துவிட்டு, அவர்களுக்குள்ளே யாரை வேண்டுமானலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்ற விதி ஏற்பாடு செய்யலாமா என்ற யோசனை இருக்கிறது. அதற்கான விதிகளும் செய்ய வேண்டும்.

சப்ளிமெண்டரி எஸ்டிமேட் வந்திருக்கிறது. நாம் பட்ஜெட்டில் ஏற்பாடு செய்திருப்பதைவிட இன்னும் புதிய புதிய திட்டங்கள் நிறைவேற்றி அப்பொழுது ஏற்பட்டிருக்கும் அளவைவிட இன்னும் கொஞ்சம் அதிகமாக செலவு செய்வதற்காக இந்தப் புதிய திட்டங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக் கின்றன. இந்த முறையிலே இன்னொரு சப்ளிமெண்டரி எஸ்டிமேட் மார்ச் மாதத்திலே வருவதற்கு இருக்கிறது என்பதையும் நான் தெரிவித் துக்கொள்கிறேன்.

எண்ணிக்கையிலே தவறு இருப்பதுபற்றி சொல்லப்பட்டது. முன்னூற் றிரண்டுக்கு 312 என்று போட்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. நூற்றைம்பத் தொன்றை இரண்டால் பெருக்கினல் 302 வருகிறது என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். முன்னூற்று பன்னிரண்டு என்று குறிப்பிட்டிருந் தால், அது தவறு. அதைத் திருத்திக்கொண்டுவிடலாம்.

கடைசியாக, ஒரே ஒரு வார்த்தை, அரசியல் தியாகிகளுடைய குடும்பங் களுக்கு உத்தியோகம் கொடுப்பதுபற்றி குறிப்பிட விரும்புகிறேன். மான்யம் கொடுப்பது தவறு என்பது என்னுடைய கருத்து. யாராக இருந்தாலும், வேலை செய்வதற்கு வாய்ப்பு அளித்துவிட்டால், ஊதியம் கிடைத்துவிடும்.

வேலைக்கான சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும் என்பதுதான் சர்க்காருடைய கொள்கை. ஆகையால், தியாகிகள் என்று இருந்தாலும், அவர்களுடைய குடும்பமாக இருந்தாலும், அவர்களுக்கும் ஒரு தகுதி, ஒரு படிப்பு ஏற்படுத்தி, அதற்கான பயிற்சி கொடுத்து, அதற்குப் பிறகு ஏற்பாடு செய்யவேண்டும். பென்ஷன் போன்று கொடுத்துவிட முடியாது. கட்டபொம்மன் சந்ததியாருக்குக் கொடுத்துக் கொண்டிருப்பதைப்போல், பென்ஷன் கொடுப்பதற்குப் பதிலாக, நல்ல வேலை செய்யக்கூடிய தகுதி உள்ளவர்களாக இருக்கும்போது, அவர்களுக்கு வேலை செய்யக்கூடிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுப்பதுதான் அவர்களுக்கு நல்ல முறையிலே செய்வது. எந்தக் கட்சியில் இன்றைக்கு இருக்கிறார்கள் என்ற கணக்கு இல்லாமல், சுதந்திர இயக்கத்திலே யார் ஈடுபட்டிருந்தாலும், அவர்கள் இன்றைக்கு எந்தக் கட்சியில் இருந்தாலும், கட்சிப் பாகுபாடு இன்றி, அந்த அடிப்படையிலே கொடுக்கிறோமே அன்றி, எந்தக் கட்சியில் இருக்கிறார்கள் என்று பார்த்துக் கொடுப்பதில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதிலே எந்த விதமான கொள்கை மாறுதலும் இல்லை. முன்பே வகுக்கப்பட்ட கொள்கை. செலவு இன்றைக்கு ஏற்படவில்லை. இந்தச் செலவு பற்றி முன்னமேயே வாதித்து விட்டோம் என்பதைத் தெரிவித்துக்கொண்டு, இந்த மான்யத்தை இந்தச் சபை ஏற்றுக்கொள்ளும் என்ற நம்பிக்கையையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

தனி மான்யங்கள் ஒவ்வொன்றாக விவாதத்திற்கு வரும்போது, ஏதாவது ஒரு மான்யத்தை எடுத்து, அதை பொறுத்து விவாதம் நடத்தலாம் என்று கட்சித் தலைவர்கள் முன்பே தெரிவித்தார்கள். எந்த மான்யத்தை எடுத்துக்கொள்ளப்போகிறார்கள் என்று தெரிவித்தால், அதைப் பற்றி விவாதம் செய்து, இந்தச் சபை ஏக மனதாக இதற்கு வேண்டிய பணத்தை ஒதுக்கும் என்ற நம்பிக்கையோடு என்னுடைய பதிலை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The House will now rise and meet again at 3 p.m.

The House then adjourned.

**(After Lunch—3 p.m.)**

(Mr. Speaker in the Chair.)



### VI.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS CULTIVATING TENANTS PROTECTION (AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 26 OF 1958).

MR. SPEAKER : We shall now take up for consideration the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958. If we finish the consideration of this Bill before 5 p.m., we will take up the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Cultivating Tenants Protection (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 26 of 1958) be taken into consideration".